உ

திருச்சிற்றம்பலம்.

கண்ணுடையவள்ளல்

திருவாய்மலர்ந்தருளிய

# ஒழிவிலொடுக்கமூலமும்,

## திருப்போரூர் சிதம்பரசுவாமிகள்

அருளிச்செய்த உரையும்,

சிறப்புப்பாயிரச்செய்யுளுக்கு

**சி-இராமலிங்கபிள்ளை அவர்களாற்**

செய்த உரையும் அடங்கியுள்ளன.

சுத்தப் பதிப்பு.




இவை

**ஆ-எதிராஜமுதலியாரால்**

தமது

சென்னை - சூளை:

"பிரின்ஸ் ஆவ் வேல்ஸ்" அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கலாயின.

1906.

# சிறப்புப்பாயிரம்.

வள்ளல்குருராயன் வாதுவென்ற சம்பந்தன்
வள்ளன்மலர்த்தாடலைமேல் வைத்துரைத்தா-னுள்ள
தழிவிலடுக்குந்தேனை யன்பரெலா முண்ணத் [த்
வொழிவிலொடுக்கநூ லோர்ந்து.

**இச்செய்யுள் கருதிற்றியாதோவெனின்**
**இந்நூன்முகத் தாசிரியர் பெயர் முதலியவற்றைக் குறித்து**
**நிற்றலிற் சிறப்புப்பாயிர வொழுக்கமுணர்த்தல்**
**கருதிற்றென்க.**

வள்ளல்குருராயன் வாதுவென்ற சம்பந்தன்-வள்ளன்மலர்த் தாடலைமேல் வைத்து—எ-து. வள்ளலாரென்னுந் திருப்பெயருடையவர் ஞானாசாரிய ரூபராகிச் சமைய வாதிக டருக்கச் செருக்குகள் பிறபட்டொழியப் பேரருணெறியான் வெற்றிகொண்டு சீகாழியென்னுந் திருநகர்க்கண்ணே மெய்ந்நெறி விளங்க வீற்றிருந்தருளிய திருஞான சம்பந்தப் பிள்ளையாரது வள்ளற்றன்மையுடைய மலர்போலுந் திருவடிகளைத் தமது நன்முடிக்கண்ணோர் பொன்முடியாக வணிந்து.

ஓர்ந்து - உள்ளத் - தழிவிலடுக்குந்தேனை யன்பரெலாமுண்ண - வொழிவிலொடுக்க நூலுரைத்தான்—எ - து. அத்திருவடிகளி னருட்டுணையாற் றத்துவங்களனைத்துஞ் சடமென் றோர்ந்துணர்ந் தவற்றைக்கடந்து தற்காட்சியோடு திருவருட்காட்சியுஞ் செய் தங்ஙனம் வாதனையா னசைந்தெழும் போதந்தோற்ற தத்தனையத்திருவரு ளொளியினடக்கியாண்டு மேன்மேலு மெழாநின்ற சிவானந்தத்தேனைத் தாமநுபவஞ்

செய்தவா றதன்கணைன்புள்ள பக்குவருஞ் செய்தற் டச்சிவானந்தாநுபவ வந்தரங்கமெல்லாம் வெளிப்பட ங்க வொழிவிலொடுக்க மென்றே ருபதேசமுறைமை த்தருளினார் என்றவாறு.

(வள்ளலென்னும் பெயர்.)

ஆசிரியர்க்குத் தாமுன்னிருந்த கிரியாசாரிய ண்ணவ்வாசாரிய மரபின்வழித்தாய் வந்தகாரண வ சிறப்புப் பெயரென்க. அல்லதூஉம் பின்னர் ஞா விலக்கட் டமதருண் ஞான நோக்கானியைந்த கண் வென்னுங் காரணவிசேடண மேற்கொண்டுநின்ற வ லென்னும் பெயரீண் டவ்விசேடண மிசையெச்ச வி ற்ப நின்றதெனினு மமையுமென்க. இஃது வினை பண் லியவடுத்த தொகைநிலைச் சொற்றொடராகாது தொக யாய்த் தனித்தொடர் பயனிலை யண்மைப்பொரு ளுை யின்றி யிடையிட்டு நிற்கத் தான் செய்யுண்முதற்கட் ட திருந்தமையி னற்றலின்றேலோ வெனின், அற்றன்று டைமடங்குறித்த குணங்காரணமாக வந்த விவ்வள்ள னும்பெயர் தன்னுறுப்புகளுட் கொடை குணம் புக மெ மென்னு நல்வகைக்குறித்த பல்பொருட் பகுதியாய வ யென்னு முதலுறுப்பா னசிரியர்க்குளவாய வக்கொடை லிய வருட்குணங்களைக் குறிப்பிற்புலப்படவிரித்தலிற் ெ ளாற்ற லுண்டென்க. அல்லதூஉம்-இப்பெயர் உயர்பெ கிடனு யுடனிலைக் கூட்டாய் ஒருநெறியசைத்தா யோ தழூவிப் பல்வகைக் குறிப்பிற்படர்ந்து முற்றியைபுவண் பெருஞ் சொல்லாக நிற்றலிற் சொல்லாற்றலு முண்டெ

ஆயினிவ் வாசிரியர்பெய ரிச்செய்யுளி னிடைகடை னென்றி னிறுத்தாது முதலடிமுதற்சீ ரேதுகைத் தொ கணிறுத் ததிற்குறித்ததியாதோவெனின், ஒன்றிரண்டெ கொடண்டு மறையாகம நன்றிருமுடிபி னடுவிலை நடாஅ

யும்பெறு தத்துவசியதியிற்போந்துண் மலக்தெறுமறிஞர் வாழ்த்திப்பரவும் ஆசிரியர் சன்மார்க்கமுதலிய மார்க்க நான்கனுட்டலைமையிற் றலைமையாய வுத்தமசன்மார்க்கத்தின ரென்பது குறித்ததென்க. இங்ஙன முத்தம சன்மார்க்கத்தின ரென்பதை யாசிரியர் கூறிய இதுவென் றதெல்லாம் பொய்யென்று னென்னுந் திருவெண்பாவாற் காண்க:—இஃதின்னும் விரிக்கிற் பெருகும்.

குருராயரென்பது - திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்குச் சிறப்பிற் சிறப்பாய காரணப் பெயராய்நின்று ஓதியுணர்ந்துபன்னுட் பலசாதனங்களின் முயன்றுமுயன் றாசாரியத்தன்மை யொருவாறறிதிற் கிடைப்பப்பெற்று மோரோர்காலங்களினவத்தைவயப்பட்டு மயங்கு மற்றையாசாரியர்போலா தோதாமல் வேதாகமாதிகளை முற்றுமுணர்ந் திறைப்போது மோர்சாதனங்களின் முயன்றலின்றி ஞானாசாரிய வருளிலக்கணங்களனைத்துந் தாமேதம்பானிரம்பிநிற்ப வமர்ந்தனரென்பதூஉம் ஓதியுணர்ந்த வவ்வாசாரியர்க்கெல்லா மவரவரறிவின்க ணருளுருவாய் நின்றறிவித்து மாசாரிய உருவாய் வெளிநின்றனுக்கிரகித்தும் நின்றனரென்பதூஉம் - திருநோக்கஞ் செய்தன்முதலிய வறுவகைத் தீக்கையானுமின்றித் தமது திருவுருவைக்காண்ட னினைத்தன்மாத்திரையே பக்குவரல்லாரும் பக்குவராய்ப் பயன்பெறநின்ற திருவருட்பெருமைய ரென்பதூஉங் குறித்ததென்றுணர்க. இங்ஙனம் ஓதாமல் வேதாகமாதியுணர்ந்தமை முதலியவற்றை யாசிரியர் கூறிய தன்மையுமுன்னிலையுமென்னுந் திருவெண்பாவாற் காண்க.

அல்லதூஉம் - குருராய னென்பது வாதுவென்ற சம்பந்த னென்பதற்கு மேனிற்கவைத்த விதப்புக்குறிப்பாற் பிள்ளையா ரிவ்வவதாரத்தின் மேனின்ற வவதாரத்தினுங் குமாரசற்குருவா யானார்க்கு மகத்தியனார்க்கு முபதேசித்தருளிய வாசாரியத் தலைமையுங் குறித்ததெனக்கொள்க. (அருணகிரி

நாதர்) தென்னவனங்கனஞ் சூழ்காத்திரிகை சூலகரத், தென்னவனங்கனந் தப்பதீட்டினன் செல்வமுன்பின், றென்னவனங்கனன் னீற்றுற்றிருத்திய தென்னவின்னங், தென்னவனங்கனங் கைச்சிலைக்கூனையுந் தீர்த்தருளே. என்றதனாற் பிள்ளையா ரிவ்வவதாரத்திற்கு மேனின்ற வவதாரத்திற் குமரசற்குரு வென்பது காண்க. (கல்லாடம்) உழன்மதிற் சுட்டுழனைகைப்பெருமான் வணங்கினின்றேத்தக், குருமொழிவைத்தோய் குறுமுனிதேற நெடுமறைவிரித்தோய் (சித்தியார்) அருமறையா கமமங்க மருங்கலை நூறெரிந்த, வகத்தியனுக்கோதுணைக்கு மருட்குருவாங் குருளை, என்பவைகளா லானுர்க்கு மகத்தியனுர்க்கு முபதேசித்த வாசாரியத் தலைமையையுணர்க.

ஆயிற் குருவேந்தனென்னது குருராயனென்றதெது குறித்தற்கோவெனின் நான்கன் வேற்றுமையா னடுத்து மிக்குயர்நெறிப் பொருண்மையின் வந்தகாரகச் சிறப்பொருதலைத் தொடர்மொழிப் பெயராய விக்குருராய னென்பதன் கட் குருவென்பதன் முதனிலையெழுத்துத் தமிழியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும் ராயனென்பதன் முதனிலையெழுத்துத் தமிழியல் விதியின்றி யாரியவியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும்வந் திருவகையியலுங் கோடலி னிதனைத் தமபெயராகவுடைய பிள்ளையாருந் தமிழ்நூல் வடநூலென்னு மிருவகைநூற்கு முரியாரென்பது குறித்தற்கென்க. ஆசிரியர் மறைப்புலவன் றமிழ்க்குரிசில் சீகாழிச் சம்பந்தனென்றதனு லிருவகை நூற்கு முரியாரென்பது காண்க வென்க. அல்லது உம் - பொருள் வேறுபடாது சிறிதே வடிவு வேறுபட்டுநின்ற குருராய னென்பது தன்னையுள்ளுன்றி நோக்கினர்க் கிலைமறை காய்போல் ஜாவென்னு முயிர் மெய்யோடிருந்த தன்முன் வடிவமுட்கொண்டு விளங்கக் காட்டி நிற்கின்றதாகலி னிதனையுடைய பிள்ளையாருந் தமது
·மை வேறுபடா துத்தமபுருட வுருவங்கொண்டு

ன்ற தம்மை யன்பா லுள்ளூன்றி நோக்கினோர்க்குக் குமார சற்குரு வென்னும் பெயர்கொண் டளவிகந்த சூரியருதயம் போன் றொளிவீசுந் தம்முன்னுருவாய தெய்வத் திருவுருவுட் கொண்டு விளங்கக்காட்டிநின் றனரென்று குறித்தற்கென்பது மாமென்க.

(ஆளுடையபிள்ளையார் புராணம்) மறையவர் திருவே வதிகவிலையே வளர்ஞானப், பொறையணிமுகிலே புகலி யர்புகலே பொருபொன்னிச், துறைபெறுமணியே சுருதியி னொளியே வெளியேவந், திறையவனுமையா ளுடனருட்ர வெய் தினையென்பார்.

என்று மூவாண்டிற் பிள்ளையார் திருவருள் வடிவைக் கண்டு சீகாழியுள்ளார் வியந்துகூறியவாறாய் விச்செய்யுளால் உள்ளூன்றி நோக்கினர்க்குத் தம்முன்னுருவைக்காட்டி நின் றனரென்பது காண்கவென்க.

இனி யின்றியமையாக் காட்டுளதேற் காட்டுவதன்றி மற் றைய விரிக்கிற் பெருகுமென்க.

அல்லதூஉம் - குருவென்பத னீற்றுயிர்மெய்யோடு ராய னென்பதின் முதலுயிர்மெய்புணராப் புணர்க்கையாய் நின்ற தாகலி னிங்ஙன மானந்த வடிவாராகிய பிள்ளையாருந் தாங் கொண்டருளிய மாளிடத் திருவுருவோடு புணராப் புணர்க் கையாய் நின்றனரெனக் குறித்தற் கென்பதுமாமென்க.

அல்லதூஉம் - குறிலிணைக் கெதிர்நெடில் குறிலென் னீடாகநிற்பவு மீற்றினவ் வெண்ணீடின்றி யொற்றுநிற்பவுந் தொடர்ந்த மொழியாகலிற் பிள்ளையாரும் பக்குவர்க்கு மறைப் பொருளாயு மதிபக்குவர்க் கநுபவப்பொருளாயு மிவ்விரண்டி லுங் கலவா ததீதப்பொருளாயு நின்றன ரென்று குறித்தற் கென்பதுமா மென்க. இங்ஙனம் குருராயனென்பதிற் குவ்

வென்பது இருள், ருவ்வென்பது அருள், ராயனென்பது விவ ங்கச்செய்கின்றோன் பொருளாம்; இதனால் குவ்வென்னு மக த்தாவத்தையி னின்றோனை ருவ்வென்னுஞ் சுத்தாவத்தையிற் ரும்வின்ற வண்ண மிறுத்துகின்றோர் குருவாவர். இச்சுத்தா வத்தைக் காதாரனாகிய மதீதனாகியும் விளங்கி யிவ்வவத்தைய னின்று மக்குருவாயினோர் தாழாத வண்ணம் அருள்செய்து நின் றதீதப்படுத்துகின்றோன் ராயனாவன், ஆகலி னிதனானு முணர்கவென்க.

எழுத்தாதிப் பல்வகைக்குறிப்பிற் பொருணெறிப் பற்றி நின்றநோக்கஞ் செறிவு நுட்ப மிங்கித மின்பங் கம்பீரஞ் சிற ப்புறுதி முதலிய நற்குணந் தழீஇய சொற்புண ரீதென்றே யாசிரியரும் சரிதாதி நான்கினுக்கு மென்னுந் திருவெண்பா வினிடைக்கட் குருராயனென் றிதன்பெருமை தோன்றவைத் தனரென்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகுமென்க.

வாதுவென்ற சம்பந்த னென்பதிற் பொதுவானே வாது வென்ற வென்ற தென்குறித்தோவெனின் எண்வகைக் குன் றத் தெண்ணாயிரவராய பாயுடுக்கைப் பறிதலைச் சமணர்க ளொருங்கேகூடித் தென்மதுரைக்கட் செந்தமிழ்ப் பாண்டி யனை முன்னிட்டுச் செருக்காற் செய்தசுரவாதம் அனல்வாதம் புனல்வாதங்கள் பிற்படத் திருநீற்றானுந் திருவாக்கானும் வெ ன்று திரள்கொண்டமையன்றியும் பரசமைய கோளரியென்ற தானே யொலித்த திருச்சின்னத்தின் றெய்வப் பேரொலி கேட் டுளம்பொறா தெதிரிட்டு மறித்த போதமங்கைப் புத்தந ந்தியின் பொய்த் தருக்கமும் புழுத்தலையும் பொடிபட்டழிய வும் பின்னருள்ளது போன் றில்லதைப்பற்றிச் சாக்கியக் குழு வுட் டலைவனாய சாரிப்புத்தன் சிற்சிலவகையாற் செய்த சமய வாதந் தலைதடுமாறவுஞ் செந்தமிழ்வேதத் திருமுறைதாங்கி மேம்படுமெறிஞான் வெற்றிகொண்டமையும் திருவோத்தூரி ன்கண் ணானுக்கிடுபனை யாண்பனையாயிற்றேயென் றசதியா

டிய வமணக்குழூஉக்களின் வாய்வாதங்கண் மண்பட்டொழி யத்தாந் திருவாய்மலர்ந்த திருக்கடைக்காப்பு னோர்மொழி யானே யவ்வாண்பனை பெண்பனையாகச்செய்து விறல்கொண் டமையுங் குறித்ததென்க.

அல்லதூஉம்-வாதென்பதி லக்கணையாகக்கொண்டு பெரு மணநல்லூரின்கட் டிருமணநல்விழாவைத் தரிசிப்பான் வந்த மக்கட்கெல்லாந் தொன்றுதொட் டிடைவிடா துடனிழற் போற் சூழ்ந்துள பிறவிப்பெருவாதக வனைத்தும் வென்றதூ உம்-திருப்பாச்சி லாச்சிரமத்தின்கண் மழவன் மகளார்க்கடு த்த முயலகவாது வென்றதூஉம் - மருகறகண்ணோர் வசியனு க்கடுத்த விடவாது வென்றதூஉம்-இவைமுதலியவுங் குறித்த தெனினுமாமென்க. வெற்றிகொண்ட பொருட்டிறன்முதலிய வற்று ளொன்றேனுந் தோன்றக்கூறுதிலேசினே வாதுவெ ன்ற வென்றதென் குறித்தோவெனின் பிறர்க்கிங்ஙனம் வேற ல் தம்மானுந் துணைமையானும் பற்பலநாட் பற்பலவகையின் முயற்சிசெயினு முற்று தெனினும் பிள்ளையார்க்குச் செந்த மிழ்பொழியுந் திருவாக்கானே யாண்டாண் டவ்வேறன்முற்றி யதென்பது குறித்தென்க. வாது என்பது குருராயனென்பத ேனுடுஞ் சம்பந்த னென்பதனோடுஞ் சாராது நடுநின்றமை யின் அத்துவித நெறியினுஞ் சேராது துவீத நெறியினுஞ் சாராதுநின்ற பதிதவாதிகளதுபய னில்வாதமெனினுமமையு மென்க. எதிரேற்கப்பட் டெதிர்வினை கீழ்ப்பட மேற்கொள் வினையெழுச்சிப் பொருளின்வந்த வெல்லென்னும் பிறவினை ப்பகுதியா னடுத்தவென்ற வென்னும் பெயரெச்சஞ் சம்பந்த னென்னும் பெயர்கொண்டு முடிந்தது இங்ஙனம் வெற்றிகொ ண்டபருவம் பிள்ளையார்க் கிளங்குமாரப் பருவமெனக் குறித் ததென்க. என்னை எச்சமென்ப தினஞ்சேய்மேற்றாகலின்.

சம்பந்தனென்பது பிள்ளையார்க்கு மூவகலைக்கண் மூவு லகும்புகழப் பொற்பொடுபுணர்ந்த வற்புதத் திருப்பெய ராக

வின் ஆண்டு பெருமானருளப் பிராட்டியாரளித்த சிவஞானத் தெள்ளமுதருந்தி யச்சிவஞானத்திற் குரிமை பூண்டமை குறித்ததென்றுணர்க. ஆயிற் சிவஞான சம்பந்த னென்னாது சம்பந்த னெனவைத்த தென்கொலோவெனின், சிவஞானமு மன்றிச் சிவாநந்த மானந்தாதீதமென்பவைக்கு முரிமைபூண்ட தலைமைபற்றியும் அவற்றையுலகுயிர்க் கிங்ஙனமென் றுணர்த்தி யுரிமைசெய்விக்கு மாட்சிபற்றியுமங்ஙனம் வைத்ததென்க.

அல்லதூஉம் - சுருங்கச் சொல்லுதல் வனப்பினாற் சம்பந்தனெனவே சிவஞான சம்பந்தனென வுரிமைச்சிறப்பு வழக்காற்றானே தோன்றுமென வைத்ததெனினுமாமென்க. எங்ஙனமெனின் இந்திரனென்பது இறைமைச்சிறப்பு வழக்காற்றே வேந்திரனையும் உடையானென்பது பொருட்சிறப்பு வழக்காற் பொன்னுடையானையுங் குறிக்குமாகலினென்க. வள்ளன்மலர்த்தானென்னும் ஒருவகைவனப் பிருவகைச்சந்தி மூவகைமொழித்தொகைச் சொற்றொடர்க்கண் வள்ளலென்னுங் குணப்பெயர் வினைமுதற் றொழிற்பய னுறப்படு முடைமைக் குணப் பெயராய்நின்று பிள்ளையாரது திருவடிகடம்மை யடைந்தோர்க்குவரையாதானந்தப் பேற்றையளித்து அவரைத்தாங்கிக் கோடலைக் குறித்ததென்றுணர்க.

அஃதேலாநந்தப்பேற்றைத் தருதற்குந் தாங்கிக்கோடற்குங் கருத்தர் பிள்ளையாரன்றோ வங்ஙன மிருப்பத் திருவடிகட்கிங்ஙனங்கூற லெங்ஙன மெனிற் றிருவடிகடம்மை வழிபடுவோர்க்கிறங்கி யின்பமீதற் பொருட் டெழுந்தருளும் பிள்ளையாரது படர்ச்சி நிகழ்ச்சிக் கருவியாய் நின்று அவரை யவ்வழிபடுவோர் பால் வருவித்தலானும் ஞானதீக்கை பண்ணுங்காலவர்சென்னியிற் சூட்டப்பட் டைக்கியம் வருவித்தலானு நித்தியானந்தப்பேறு வாய்க்குமாகலி னிங்ஙனமென்க.

அல்லதூஉம் - வாட்டமிலருளுங் கோட்டமில் குணனு மசையாநிலையு நசையாமனனும் வெருளாப்பண்பும் விடாப்

பேரன்புஞ் செவ்வியின்மரீஇ யெவ்வெவ ரெவ்வகை வேட்டனரவ்வகை விருப்பொடுகுறிப்பின் வரையாதீதல் வள்ளற்றன்மை என்பவாகலி னிவ்வள்ளற் றன்மையைத் தம்பாலடைந்தோரிடை யடைவித்தருளுங் கருணைபற்றி யங்ஙனங் கூறியதெனினு மமையுமென்க. அஃதேல் வள்ளற்றன்மைவழங்கு மலர்போலுந் திருவடியென்றன்றோ வுரைவிரித்தல் வேண்டு மங்ஙனமின்றி வள்ளற்றன்மையுடைய மலர்போலுந் தாளென விரித்திருக்கின்றதே யெனின் அங்ஙன மடைவித்தலும் வள்ளற்றன்மையே யாகலினுமுடைய தொன்றன்றே யுதவப்படு மாகலினு மிங்ஙனம் விரித்த லங்ஙனங் கூறற்கு மமைதியாமென்க.

அல்லதூஉம் - அருளின்றி யமையாத வள்ளற்றன்மைக் கவ்வருளே முதற்காரணமா மாகலின் ஆநந்தவடிவராகிய பிள்ளையா ரவ்வாநந்தப் பேற்றையளிக்கும் வள்ளற்றன்மைக்கு முதற்காரணமாகிய திருவருட்சத்தியே திருவடியென்று குறித்தற்குக் காரணத்தைக் காரியமாக வீண் டுபசரித்ததெனினு மமையுமென்க.

அல்லதூஉம் - எமது திருவடிகளை வழிபடின் வீட்டின்பமெளிதிற் றருவேமென்று பிள்ளையார் விதித்தருளிய வருள் விதிப்படியறிந்து வழிபடி னவவழிபாட்டா னவ்வீட்டின்பந் தரப்பெறுத லுண்மையாகலி னவ்வுண்மை நோக்கி யீண்டு கூறியதெனினும் பிள்ளையார் திருமேனி முற்றுந் தெய்வத்தன்மைப் பூரணமாகலி னதனையறிவிக்க வீண்டுகூறிய தெனினுமமையுமென்க. திருவடிகட்கு அடையாய வள்ளலென்பதூஉம் - ஆசிரியர்பெயராய வள்ளலென்பதூஉம் அடியிணை எதுகைத் தொடையாய் எழுத்தசை சீரொலி பொருளாதிகளானேற்றுமைகொண்டு நின்று பிள்ளையாரது திருவடித்தீக்கைக்கு மாசிரிய ரதிபக்குவத் தன்மைக்குமுள்ள வொற்றுமைப் பொருத்தம் விளக்கினவென்க.

வள்ளலென்பது - பிள்ளையார்க்குக் காரணச் சிறப்புப்
பெயராகக்கொண்டு பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங்கூறி
னித்துணைச் சிறப்பின்றென்று மறுக்க என்னெனின் அவய
வச்சிறப்பா னவயவிக்குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலு
மின்பமாகலி னென்க. இதனைப் போற்றி மானான்முகனுங்
காணாத புண்டரீகம் என்பதனாற் காண்கவென்க. வள்ளமலர்
த்தாளெனப் பாடமோதி வள்ளம்போலுங் குவிந்த வாய்மல
ரெனமலர்க்கடையாக வுரைவிரிப்பாருமுளர். அங்ஙனம் விரி
த்தலினித்துணைப்பேரும் பயனின்றெனமறுக்க. இங்ஙனமின்
னும் விரிக்கிற் பெருகுமென்க.

மலரென்பது - வள்ளற்றன்மையி னருகுவைத்தமையின்
ஈண்டு நிறைதலுங் குறைதலுமாயுள்ள நீர்நிலைக்கட் டோன்றி
யுமழிந்தும் விரிந்துங்குவிந்தும் வாடியுநின்று வண்ணமுநறை
யும் வாசமுஞ்சிறிதே சிறுபோதுகொண்டு பறித்தலாடிய சிறு
தொழிற் படுமலர்களை நீக்கி ஆண்டுதிரிபிலாத் தெய்வத்தெண்
ணீர் நிலைக்கண்ணொழியா மலர்ச்சியு மழியாமணமும் பொன்
னிறப் பொலிவும் இன்னறவொழுக்கு மென்மையுந் தன்மை
யும் வியப்புறு முருவுங்கண்டோர் கண்கவர் காட்சியுமாட்சி
யுங் கொண்டு முக்காலமுங் குன்றா மலரைக் குறித்தமைகா
ண்க. என்னெனிற் பிள்ளையார் திருவடிகள் மெய்ஞ்ஞான
விளக்கமா யருண்மணம் வீசிப் பொன்னிறம்பொலிந்து ஆநந்
தமொழுக்கி மெல்லெனவுற்றுத் தண்ணெனக்குளிர்ந்து ஸ்பரிசிக்
கின்றோர் வியப்புறுமுருவா யவாது விருப்பநோக்கம் பரவவெ
ன்ற மொருதன்மையவா யிருக்கின்றமையி னென்க. ஆயி
ன் மலர்போலுந் தாளென் றுவமை விரிந்தபடி யேற்றற் கிடங்
கொடாது மலர்த்தாளென்ற தென்னெனின் அத்தெய்வத்தி
ருமலர்தனைக் கண்டோர்க்குச் சிறியவிடயானந்தந் தருதலே
யன்றித் திருவடிபோற் சிவாநந்தந் தரமாட்டாச் சிறுமைநோ
க்கியென்க.

அல்லதூஉம் - சுபவடிவாய் எவ்வகைச்சுபங்கட்கு முன்னின்றதனை விளங்குறச் செய்வதாய் மகிழ்வுடையோர் யாரு மேற்கொண் டணியப்படுவதாய் நிற்கு நன்மலர்போலு மெனக் கூறினுமமையும். என்னெனின் திருவடிகள் அருள்வடிவா யானந்தப்பேற்றிற்கு முன்னின்றளிப்பதா யறிவுடையோர்தந் தலைமேற்கொண் டணியப்படுவதாய் நிற்றலினென்க.

அல்லதூஉம் - மலரையடைந்த வண்டுகள் தனது தேனுண்டு களிகொள்ளுதல்போற் றிருவடிகளையடைந்தோரும்அருளானந்தம்பெற்றிறுமாத்தலி னிங்ஙனங்கூறியதெனினு மமையுமென்க. இதனைத் தொகையுவமை யணியாகக்கூறலின்றி வள்ளன் மலர்த்தாளெனக் கூட்டி யற்புதத்தொகை யுவமை யணியாகக் கொண்டு பொருள் கூறுவாருமுள ரவர்கூறுங் கூற்றிற் பெரும்பய னின்றென மறுக்க இஃதின்னும் விரிக்கிற் பெருகுமென்க.

தாள் என்பது அடிகட்கன்றியும் முயலுதற்கும் உண்ணின்றபொருள் வெளிப்படாமைக்கு மதனை வெளிநின்றோ ருட்சென்று கவரப்படாமைக்குங் காப்பாகக் காப்பினிற்குங் கருவிக்கு மணிதற்கணியி னிருகடையு மிணைத்துநிற்கு மிடைப்பூட்டிற்கு மிடனாகிவந்த பலபொரு ளொருசொல்லாகலின் திருவடிகள் தம்மையடைந்தோரை யானந்த நிலையுட்சேர்த்தலு மங்ஙனஞ் சேர்ந்தோர் மீட்டுமவ்வானந்த நிலையினின்றும் போதவலைவுதோற்றி வெளிப்படாமைக்கு மவத்தைகளுட்சென்று தாக்கிக் கவரப்படாமைக்குங்காப்பாக வருளுருவாய தன்முன்னிற்றலுஞ் சிவத்துடன் சீவனையிடைநின்று கூட்டுவித்தலுங் குறித்ததுகாண்க. இக்குறிப்புணர்த்தவன்றே மலர்க்காலென்னாது மலர்த்தாளென்ற தென்றுணர்க.

தலைமேல்வைத்து என்பது - ஆசிரியர் - தம்மாசாரியரா கிய பிள்ளையார் திருவடித் தீக்கை செய்யத் தாம் பெற்றமை

குறித்ததுகாண்க. அஃதேல் வைக்கப்பட்டு எனச்செயப்பாட்டு வினையெச்சத்தா னிருத்தற்பாலதன்றோவெனின் ஆசிரியர்க் கத்திருவடிக் கண்ணேயுள்ள பிரியத் தொடர்ச்சியின் பெருமைதோன்ற விங்ஙனமின்றி யிங்ஙனங் குறித்ததென்க. இதற்கு இவ்வாறன்றித்தலைமேற் பாவனையான் வைத்தெனக் குறித்ததென்று கூறுவாருமுளராலோவெனின் அவ்வாறு கூறிற் பிள்ளையா ரிந்நூலாசிரியர்க்கு ஞானாசாரியரென்பது மிவர்ஞானதீக்கை யுடையாரென்பதும் விளங்குதலின்றி மற்றை யாசிரியர்போ லெடுத்த நூ லினிதுமுடிதற் பொருட்டுப் பாவனையான் வழிபடுகடவுட் பழிச்சினரென் றிலேசிற்கருதப் படுமாகலி னிங்ஙனங்கூறன் மரபன்றென்க. தலையில்வைத்து என்னாது தலைமேல்வைத்து என்றமையான் மறைமுடிக்கண்ணே வயங்காநின்ற வச்செல்வத் திருவடியின் சீர்மைதோன்றிற்றென்க.

ஓர்ந்து என்பதில் - ஓர் என்னும் பிறவினை முதனிலை அறிவு தனக் கெதிரிட்ட வுணர்ச்சிப்பொருட்கண் ணெதிரிடுவதுபோன் றெதிரிடாதுள் ளாழ்ந்தவப் பொருட்டிற னெதிரிடப் பெயரும் புடை பெயர்ச்சியு மெதிரிட்டபின்னர் விகற்பியா தெதிர்க்குந்தோறு மெதிரிடப்பெயரும் புடைபெயர்ச்சியுங் கோடலிற் கருவித்திறனுந் தன்றிறனும் அருட்டிறனும் உற்றுணர்ந் தவ்வுணர்ச்சி விகற்பியாது தேறிநின்றமையைக் குறித்தது காண்க. இக்குறிப்புத் தோன்றவன்றே திருவள்ளுவநாயனாரு மோர்த்துள்ளமுள்ள துணரினென்றாரென்றறிக.

உள்ளத்ழிதவி லென்பதிலுள்ள மென்பதன் பகாப்பதவியிற்றுப் பகுபதப் பொருளி னிடவாகு பெயரா யணுப்பொருட்கண் வந்தவுள்ளென்னும் பகுதி யுட்புறத்து மப்போதமெழுஞ்சிற்றசைவும் பேரசைவுங் குறித்ததுகாண்க.

உள்ளமென்பது வாதனையா னுள்ளெழும்போதத்திற்காகுபெயராயது - வள்ளலென்பதுபோன் றொருமொழிசையாய் வர

வுள்ளவழிவிலென்னாது பொருத்திசையாய்வர உள்ளத்தழிவி லென்றதென்கொலோவெனின், வேற்றுமை வழியாகலினும் போதவசைவு சார்பின்றியமையாமை குறிக்கவேண்டு மாகலி னும் சாரியையோடு புணர்த்தியங்ஙனங் கூறியதென்க. அழி வு என்பதில் அழி யென்னும் பொதுவினைப்பகுதி முன்னர்த்தோற்ற நிகழ்ச்சிப் பின்ன ரோர்காலத்து மோரிடத்து மின்றிக் கெடுதற்பெயர்ச்சிக்கண் வந்ததாகலி னப்போதநிகழ்ச்சி பின்னரெக்காலத்தும் உட்புறமென்னு மெவ்விடத்துந் தோற்ற நிகழ்ச்சியின்றியொடுங்கியவாறு குறித்ததென்றுணர்க. இங்ஙனமன்றி உள்ளத்தழிவி லென்பதற்கு மனத்தி னசைவற்ற விடத்தெனப்பொருள் கூறுவாரு முளராலோவெனின், மனத்தினசைவு போதவசைவிற்றானே யறுமாகலினு மஃதறாத விடத் திஃதெவ்வாற்றானு மறாதாகலினு மதுபொருந்தாதென்க. இதனை ஆசிரியர் கூறிய பற்றாது போதும் பதறுமென்னுந் திருவெண்பாவாற் காண்கவென்க.

அடுக்குந் தேனென்பதி லடுக்குமென்பது - அடுத்தலென்னுந் தொழிற்பெயர்க்கட் டல் விகுதி தன்னொற்றுச் சந்தியொடுநீங்க வெதிர்காலப் பெயரெச்சவிடை நிலையும்மை ககரமெய்ச்சாரியையூர்ந்து தன்னொற்றுச் சந்திபெற்றுண்டு நின்றிறையு மிடப்பாடுதோற்றாது செறிதற்பெயர்ச்சியும் அடுக்கலென்னுந் தொழிற்பெயர்க்கண்ணல் விகுதி நீங்க வவ்வெதிர்காலப்பெயரெச்ச விடைநிலை யும்மை விகுதி நீங்கநின்று தன்வரவுகண்டோடிய குற்றுகரமூர்ந்த மெய்க்கண்ணேறிநின் றிறையுமிடைப்போ தின்மைபடாது பன்முறை மேன்மேலுறுதற் பெயர்ச்சியும் பொருளாகக்கொண் டிருவகைப் பகுதியொருவகை யெச்சமாக நிற்றலின் சிறிதுமிடத்தானுங் காலத்தானும் பிரிவுதோன்றாது செறிந்து பன்முறை மேன்மேலெழு மாநந்தத்தேனென்று குறித்ததென்றுணர்க.

உள்ளத்தழிவி லடுப்பது ஆநந்தமாகலிற் றேனென்பதை யுவமக்குறிப்பாற் சிவாநந்தத் தேனென்றதென்றுணர்க.

தேனுண்டவண் டசைவின்றி யத்தேன் மயமாயிருத்தல் போல, ஆனந்தாநுபவத்தர் போத வசைவின்றி யிவ்வானந்த மயமாயிருத்தலி னுவமையாகக் குறிக்கப்பட்ட தென்றுணர்க. இதனை யொப்புமைக்கூட்ட மொட்டாதிகளாகக் கூறுவாரு முளராலோவெனி னவ்வாறு கூறினும் பொருள் சிதையா மையி னொருவாறமையுமென்க. போதவசைவின்கட் டோ ற்றல் விடயானந்த மாகலிற் போதவொழிவின்கட் டோற் றல் சிவானந்தமெனக் குறித்தற் குள்ளத் தழிவிலடுக்குந் தேனென்றதென் றுணர்க. எங்ஙனமெனின், உள்ளத்தழி யாமையி னடாத்தேனென் றெதிர்மறுக்கப் படுதலினென்க. மதுரம்பற்றித் தேனை யானந்தத்திற் குவமைகூறுவாருமுளரா லோவெனின் அது நாவிடையமா யிறைப்போதுசிற்றலி னித் துணைச்சிறப்பின் றென்க.

அன்பரெலாமுண்ண வென்பதில், அன்பர் - என்பது பொருள் புகழாதியைக் குறித்துப் பயில்வோரை நீக்கிச் சிவா நந்த மென்னுளடைதுமென் றிடைவிடா ததனையே விரும் பிப் பயில்வோரைக் குறித்ததென்றுணர்க. எலாமென்பது சரிதாதி கன்மமார்க்கங்களைக்கூறும் பிறநூல்களெல்லாம் பரு வநோக்காது சாதி சமயாசார விகற்பங்களை நோக்கிச் சிலரை நீக்கியுஞ் சிலரைச்சிறுவியு மதிகரித்தல் போலாது அச்சாதி சம யாதிகளி னுயர்ந்தோர் தாழ்ந்தோ ரியாரேனும் பருவத்தராயி னிந்நூற் குரியராவரென்பது குறித்ததென் றுணர்க.

உட்கொளவென்னும் பொருளுட் கொண்டு பொருட்டுப் பொருளிற்போந்த உண்ணவென்னும் வினையெச்சம் ஆனந் தாநுபவத்திற்கு விடாத விலக்கணை யாயிற்றென் றுணர்க. என்னையெனில், உண்ணலிற் பசிநீங்கல்போல் ஆனந்தாநுப வத்திற்பசுத்துவ நீங்கலினென்க. பயன் காரணம்பற்றி வந்து வொழிவிலொடுக்க நூலென்பது ஒழிவிலொடுக்க மென்னு நூல் ஒழிவிலொடுக்கந் தருநூலென விருவழிக்கும் பொது

வாய சந்தியான் வந்தமையிற் றன்னை வேதாந்தத்திற்குஞ் சித்தாந்தத்திற்கும் பொதுவென்று குறித்ததென்றுணர்க.

ஒழிவிலொடுக்க நூலுரைத்தா னென்பதில் வேற்றுமை சாரியை யுருபு முதலியவொன்றும் விரியாது நிற்றலின் ஞானா சாரமன்றிக் கருமாசாரமொன்றும் விரியாத விந்நூலி னின் மலத்தன்மை தோன்றிற்றென் றுணர்க. உரைத்தானென் பது - ஒருவர் மதிநுட்பத்தாற் றாங்கண்டறிந்த மாற்றுயர்ந்த பொன்னின் றன்மையைப் பிறருமறிந்து பயன்கோடற்குக் கட்டளைக்கல்லி னுரைத்துக் காட்டல்போற் சுருதிகுரு வநுப வத்தாற் றாமநுபவித்தறிந்த சிவானந்தப்பேற்றின் றன்மையைப் பக்குவருமறிந்து பயன்கோடற் பொருட்டு நூற்கணுரைத் துக் காட்டினனென்று குறிப்புறுத்திற்றென்றுணர்க.

என்னெனி னுரையென்பது பொன்னுரையும் பொரு ளாகக் கேடலினென்க. உரைத்தான் என்னும் பயனிலை - செயப்படுபொருளி னிறுதியி னியையாது செயப்படு பொரு ட்குங் கருவிப்பொருட்கு மேற் றாடலைமேல் வைத்து என்பத னிறுதியிற் றொடர்ந்து நின்ற தென்னெனிற் சிவஞானத் தீக்கையுடையரா யுரைத்தா ரென்பது மன்றித் தமதாசாரியர் திருவடிசான்றாகத் தாங்கண்ட வநுபவத்தை விளங்க வுரைத் தாரென்பதுங் குறித்தற்கென்க என்னை.

தாடலைமேல் வைத்து எனவே சான்றாக வைத்து என் பது தானேயமையு மாகலின் - தலைமேல்வைத்து என்பதன் பின்னிற்கக் கடவதாய் ஓர்ந்து என்பது செயப்படு பொருட்டி னிறுதி நிலையாய் நின்றதென்னெனின், இந்நூல் கற்றோர் க்குக் கருமங் குறைந்து ஞானமேலிடுத லுண்மை குறித்தற கென்க. எங்ஙனமெனின் அவ்வோர்ந்து என்பது வினைக்கு றையாகலினென்க. உள்ளத் தழிவிலடுக்குந்தேனை யன்பரெ லாமுண்ண வொழிவிலொடுக்கநூ லோர்ந்துரைத்தான என க்கொண்டு போதவொழிவின்கண்ணடுப்பதாய வானந்தத்தை

யன்பரெல்லா மநுபவிக்கும் பொருட்டு வேதாகமமுடிபான ஞா னநெறியையாராய்ந்து ஒழிவிலொடுக்க மென்றோர் நூலையுரை த்தார் எனப் பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங் கூறின் ஆசிரியர் பரஞான முடையாரென்பது தோற்றுது. அபரஞா னமுடையராகப் பொருள்படு மாகலினும் அபரஞானத்தாற் கூறப்பட்டநூல் மிகச்சிறவாமையானு மதுபொருந்தாதென்க.

இந்நூலியற்றற்கேற்ற நற்பொருளுடைமையுஞ் சிறப்பு ப்பாயிர விலக்கணத்துளாக்கியோன் பெயரேயென முதனிறு த்தப்பட்ட நிமித்தகாரணச் சிறப்புடைமையும் இச்செய்யுண் முடிபுக் கெழுவாயாந் தலைமையுடைமையும்பற்றி வள்ள லென முதனிறுத்தியதென்க. இந்நூலாசிரியர்க் காசரிய ரிவ ரென்பது தோன்றற்கு அவ்வள்ளலென்ப தன்புடைகுருராய னென்பதை நிறுத்தியதென்க. இங்ஙனம் ஆசாரியரென்பவர் பிள்ளையாரென்பது தோன்றற்கு ஞானசம்பந்தனென வைத் தல் வேண்டுமாகலின் அந்தஞானத்தைக் குறிக்கும் பாசவெற் றியாய வாதுவென்ற வென்பது முன்கூட்டிச் சம்பந்தனென வதன்புடை நிறுத்தியதென்க.

இரண்டாமடிக்கட் பிள்ளையார் தாள்க ணிறுத்தத் தொ டங்கி முன்னர் அத்தாள்களி னியற்கை யருளென்று குறிக்க வள்ளலென்றும் அதன் வடிவ மாநந்தமென்று குறிக்க மலரெ ன்று முறையேவைத்து வள்ளன் மலர்த்தாளென நிறுத்திய தென்க. தாள்களன்றியும், பிள்ளையாரும் அருளியற்கையரே யென்பது குறிக்கச் சம்பந்தனென்னுஞ் சத்தந்தோற்றியவு டன் வள்ளற்சத்தந் தோன்ற நிறுத்தியதென்க. இங்ஙனம் நிறுத்தியவை - சொற்பொருண்முறைநிலை - தாளென்பதற் குந் தலையென்பதற்குமுள்ள சொற்பொருட்சம்பந்த வின்பம் பற்றித்தாடலையென்றும் தலையென்பதற்கும் மேலென்பதற்கு முள்ள உரிமைநோக்கம்பற்றித் தலைமேலென்றும் மேலென் னு மிடப்பொருட்கு வைத்தற்றொழில் சிறந்ததுபற்றி மேல் வைத்து என்றும் வைத்து என்பதற்கும் உரைத்தானென்பதற்

நும் இறுதியுமுதலு மினமாதல்பற்றி வைத்துரைத்தானென்றும் முறையேசிறத்தியதென்க. இங்ஙனம் சிறத்தியவை சொன்முறைநிலையும் சொற்பொருண்முறை நிலையுமாம்.

இங்ஙனம் முற்றுமுறைநிலை கூறப்புகின் மிகப்பெருகுமாகலி னொருவாறு காட்டினம். மற்றையவு மிவைகொண்டுணர்கவென்க. இச்செய்யுட்பொருள் ஆசிரியர தருளறிவின் மாட்சிமையை வெளிப்படையானுங் குறிப்பானும் விளங்க விரித்தலின் வாகைத் திணையுட் சால்பு முல்லைப்பொருளின் பாற்பட்டதென்க. என்னை, சால்பு முல்லைப்பொருள் - வான்றோயுமலையன்ன சான்றோர்தஞ் சால்புரைத்தன்று என்பவாகலின் இச்செய்யுள் தன்னுட் செயப்படுபொருளாய்நின்ற நூற்சிறப்பைத் தன்றானுந் தன்னுறுப்புக்களானுங் குறிப்பாற்குறித்துநின்ற நன்னேக்குடைச் செய்யுளென்றுணர்க. அங்ஙனங் குறித்தவை யெங்ஙனமெனின்.

இச்செய்யுள்தான் கலிப்பா வஞ்சிப்பா ஆசிரியப்பா வென்னு முப்பாவினுஞ் சிறந்த வெண்பாவாகலி னிக்குறிப்பால் இந்நூல் சரிதைநூல் கிரியைநூல் யோகநூல் என்னு முந்நூலினுஞ் சிறந்த ஞானநூலென்று குறித்ததென்க. தான் ஈரசையானுசிட்டிருவகைத்தளைதழீஇ யொழுகிசைச்செப்பலோசையான்வந்ததாகலி னிக்குறிப்பா லிந்நூல் ஆகமமுடிவும் வேதமுடிவுங்கூறு மிருவகைநெறியு மொருவகை நெறியாத் தழீஇக்கொண்டிருந்தமை குறித்ததென்க.

தான் ஒன்றடுத்த விரட்டை முப்பத்தா றெழுத்துக்களைக் கொண்டு நிற்றலி னிக்குறிப்பா னிந்நூல் பாசமொன்றடுத்த தத்துவ முப்பத்தாறென்று மம்முப்பத்தாறன் றன்மையிவை யென்று பகுதறிதல்வகையு முணர்த்துவதெனக் குறித்ததென்க. தான் நான்கடுத்த முப்பத்தாறசைகளை யசைத்துநிற்றலி னிக்குறிப்பானிந்நூல் அத்தத்துவ முப்பாத்தாறனையு நியதிகளைத் தன்முனையை யுணர்த்துவதெனக் குறித்ததென்க.

அஃதேன், முப்பத்தாறன்மே ஞன்கடுத்த தென்னெனின் ஆன்மதத்துவத்தின் வன்மைதோன்றற்கோரசையும் வித்தியா தத்துவத்தின் வலிதோன்றற் கோரசையு நாததத்துவத்தின் பெருமைதோன்றற் கோரசையு மிருந்தனவென்க. தான் - பதினைந்துசீர் சீர்கொளநிற்றலி னிக்குறிப்பானிந்நூல் ஆசாரியத் தன்மை சீடத்தன்மை பதித்தன்மை பசுத்தன்மை பாசத்தன்மை உபதேசத்தன்மை பக்குவத்தன்மை யோகநிவர்த்தி கிரியைநிவர்த்தி சரிதை நிவர்த்தி விரத்திவிளக்கந் துறவுத்தன்மை யருளவத்தைத்தன்மை வாதனைமாண்டார் தன்மை நிலையியல்பு என்னுமிப்பதினைந்தனையுஞ் சீர்பெறக்கொண்டதென க்குறித்ததென்க.

தானெழுவகைத்தளையி னியைந்ததாகலி னிக்குறிப்பானிந்நூல் ஆன்மதரிசனம் அருட்டரிசனம் பரைதரிசனம் பரையோகம் பரையோகநீக்கம் போதவொழிவு இன்பப்பேறு என்னும் எழுவகைநிலையு மறிவிப்பதெனக் குறித்ததென்க. தான் தனிச்சொல்பெற்று நான்கடியுடனடந்ததாகலி னிக்குறிப்பானிந்நூல்கூறு மொப்பற்ற ஞானமும் சுத்தச்சரிதை சுத்தக்கிரியை சுத்தயோகம் சுத்தஞானம் என்னான்குபாதத்தோடு நடப்பதெனக் குறித்ததென்க. தான் - ஒரூஉத்தொடையொடு முத்தொடையானியன்றதாகலி னிக்குறிப்பா னிந்நூற் சுருதி குரு அனுபவமென்னு மூன்று மொத்தியன்றதெனக் குறித்த தென்க.

அல்லதூஉம் - இச்செய்யுளடி நேரடியாய் விதித்தவெழுத்தெல்லையி னிகவாதுநிற்றலி னிக்குறிப்பானிந்நூல் மெய்வீட்டினெறித்தா யவ்வீட்டினெறிக் கெல்லையாய ஞானத்தினிகவாது நின்றதெனினுமாமென்க. எல்லை என்னெனிற் பதினெழுத்தென்ப நேரடிக்களவே யொத்த நாலெழுத்தோற்றலங்கடையேயென்பவென்க. இங்ஙனங் குறித்தற்கன்றே இச்செய்யுளீற்றடியி னூற்பெயரை வேறடைகொடாது தனிமையினிறுத்தியதென்க.

இச்செய்யுள் சிறப்புப்பாயிரத்ததாயி னப்பாயிரத்திலக்கண மிதனுளிருந்தவா றெங்ஙனமெனின், வள்ளலென்பத னூலாசிரியர்பெயரும், குருராயன் வாதுவென்றசம்பந்தன் வள்ளன்மலர்த்தாடலைமேல் வைத்துரைத்தா னென்பதனான் ஞானாசாரியராகிய பிள்ளையாரருளுபதேச வழித்தென வுட்கொளப்படுதலின் வழியும், இந்நூற்றொடர் தமிழ்த்தொடராகலி னித்தமிழ்வழங்குநிலமே யிந்நூல்வழங்குநிலமெனக் கருதப்படுதலினெல்லையும், ஒழிவிலொடுக்க நூலென்பதனானூற்பெயரும், ஒழிவிலொடுக்கமென அன்மொழித் தொகைப்பெயர் மாத்திரையி னில்லாது நூலென விரித்தமையி னிந்நூலுந் தொகைவிரியுடையதெனக் கருதப்படுதலின் யாப்பும் உள்ளத் தழிவிலென்பதனாற் கருதிய பொருளும், அன்பரொலா முணவென்பதினால் அன்பரொலாமுணற் பொருட் டிஃதியற்றுகவென் றுள்ளெழுந் தெதிரிட்டுநின்ற தாசிரியரது பெருங்கருணையெனக் கருதப்படுதலிற் கேட்போரும், உள்ளத்தழிவிலடுக்குந் தேனென்பதனாற் பயனும் புலப்படுமாகலி னவையிருந்தவாறிங்ஙனமென்க.



# இப்பாயிரச்செய்யுள் முற்காலத்தது.

இவ்வுரை

சி-இராமலிங்கபிள்ளையவர்களாற்

செய்யப்பட்டது.



சிவமயம்.

# ஒழிவிலொடுக்கம்.



காப்பு.

## விநாயகர் தோத்திரம்.

*நிம்பநிழற்பா-லும்பன்முகத்தார்*
*செம்பதுமத்தா-ளம்புகருத்தே.*

## சுப்பிரமணியர் தோத்திரம்.

*ஒழிவிலொடுக்கத் துரைவரநா யேற்குச்*
*செழிவி லொடுங்கருணை சேர்க்கு-முழுதின்பப்*
*பண்டைவள நாட்டும் பரமகுருப் போரூரன்*
*றண்டைவள நாட்டுதிருத் தாள்.*

## திருஞானசம்பந்தசுவாமிகள் தோத்திரம்.

*வள்ளலுரைத்த வழுவிலொழி வில்லொடுக்கத்*
*தெள்ளுமுறை யெல்லாந் தெரிவிக்கு-முள்ளமே*
*யெம்பந்தநீக்கு மிறைவன் றமிழ்க்காழிச்*
*சம்பந்தன் பூஞ்சதங்கைத் தாள்.*

*ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்*
*ஞானகுரு வாணியையுண் ணாடு.*

---

"உள்ளவுரைநாயேற் குறச்செய்யும்" என்று பாட மோதலுமுண்டு.

ஈண்டு - இத்தோத்திரச் செய்யுட்கள் உரையாசிரியரால் இந்நூற்கு உரை இனிது முடிதற்பொருட்டு இயற்றப் பட்டன.



உ

திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்கம்.



## உரைபாடம்.



### முதலதிகாரம்.

### வேதாகமப்

### பொதுவிலுபதேசம்.



ஆசாரியர் அநாசாரியர் இலக்கண முதலியவற்றையும்
இந்நூலிற் கூறிய கருத் தெல்லாவற்றையும்
தொகுத்துப் பொதுவான் உபதேசமாகக்
கூறினமையான், இவ்வதிகாரத்திற்
குப் பொதுவில் உபதேசம்
என்று பெயராயிற்று.



வெண்பா.

வேதாக மப்பவுரி வீசுங் களாசநிலை
ஆதார வெற்பி லபிடேகம் - போதத்
திருளிலெழு பானு வெனவொழிவி லின்பக்
கருணைபொழி வானெடுத்த கை.

(இதன்பொருள்.) எனது ஒழிவு இல் இன்பக்கருணை பொழி வான் எடுத்த கை எ-து,—எனது போதாகாசத்தின் கண்ணே அருளாநந்தத்தைப் பொழியாநின்ற பிள்ளையார் உயர எடுத்துச் சுட்டோடு மெய்ப்பொருளைக் காட்டிய திருக்கரமானது;

வேதாகமப் பவுரி வீசும் களாசனிலை என்-து,—வேதாகமங்களினது பவுரிக்கூத்தினைப் பிரம்போடுங் கைவாரங்கொண்டு வீசி நிறுத்தும் ஓர் உண்மைநிலை;

ஆதாரவெற்பில் அபிடேகம் என்-து,— ஆறாதாரங்களாகிய பொருப்பரையன் முடியிற் சூட்டும் ஓர் மகுடம்;

போதத்து இருளில் எழுபானு என்-து,—ஆன்மபோதத்தின் கண்ணதாகிய ஆணவ இருளைக் கிழித்து எழாநின்ற ஞானசூரியன், என்றவாறு.

அரங்கின்கண் நடிக்கின்ற கூத்தர்பலருக்கும் முதல்வனாகிய கூத்தன் வந்து கூத்தைக் கைவாரங்கொண்டு நிறுத்தி, அவ்வரங்கின்கண் உள்ள குறுமன்னியர்கட் கெல்லாம் முதல்வனாகிய மகாமன்னியனையே புகழ்ந்து சுட்டி நின்றாற்போல, வேதாகமங்கள் கூறிய பல சமய நெறிகளையும் அச்சமயங்கட்குரிய கடவுளரையும் கடந்துநின்று, அக்கடவுளருக்கெல்லாம் முதல்வனையே பிள்ளையார் பரஞானக்கண்ணினால் உணர்ந்து புகழ்ந்து சுட்டி நின்றமையால், "வேதாகமப்பவுரி வீசுங் களாசனிலை" என்றும், நிராதாரமாகிய அருளினின்று மீதானமாகிய மெய்ப்பொருளில் சுட்டோடும் அதீதப்பட்டு நின்றமையால், "ஆதாரவெற்பிலபிடேகம்" என்றும், ஆன்மபோதத்தை மறைத்த ஆணவ இருளை நீக்கிச் சிவத்தை அறிவிக்குந் திருவருளைப்போல் இறைவனைப் பிறருக் கறிவித்தமையால், "போதத்திருளிலெழுபானு" என்றுங் கூறினார்.

(உதாரணம்.) "தோடுடைய செவியன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக், காடுடையசுட லைப்பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வன், ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த, பீடுடையபிர மாபுர மேவிய பெம்மானி வனன்றே" என்னுந் திருக்கடைக்காப்பால் மெய்ப்பொருளைத்தரிசித்துச் சுட்டிப்புகழ்ந்து நின்றபோது திருவுள்ளம் மெய்ப்பொருள் கிருபாநோக்கம் வைக்க அக்கிருபாநோக்கத்தின்

வழித்தாய்ச்சென்று சிவத்தில் அதீதப்பட்டு நின்றார் என்பதும் பிறர்க்கறிவித்தார் என்பதும் "எனதுள்ளங் கவர்கள்வன்". என்பதனாலும் "பெம்மானிவனன்றே" என்பதனாலுங் காண்க இத்திருக்கடைக்காப்பு பிள்ளையார் ஞானபோனகம் உண்டருளியபோது அருளிச்செய்யப்பட்டது. பிரளயாகலர்க் கநுக்கிரகித்தலும், இது வேதாகமங்களை முதற்பொருளாக்கி அவை ஒன்றோடொன் றொவ்வாது கூறும் பலபேத சமயநெறிகளைக் கூத்தாக்கினார். ஆதாரம் ஆறையும் ஊடுருவிநின்ற சுழுமுனையை மேருவென்றும், இடைபிங்கலைகளை அதனை வலம்வருஞ் சூரிய சந்திரரென்றும், யோகிகள் கூறுவார் ஆகலின் "ஆதார வெற்பு" என்றார். முடிகூறினமையால் வெற்பென்னும் அஃறிணை உயர்திணையாகக் கூறப்பட்டது. "கை" என்பதைமூன்றிடத்துங்கூட்டுக. "கைவாரங்கொள்ளுதல்" =கூத்தை விறத்தற்பொருட்டு ஓகோ என்னும் அடுக்குமொழி கூறிக் கரம் உயரயெடுத்து வீசுதல். "களாசம்"=பிரம்பு. பிரம்போடும் வீசுமெனக் கூட்டுக.

இத்திருவெண்பா குருதோத்திரம். (௧)

தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான் சற்குருவாம்,—மன்னுபெருஞ் சீய மதயானை - தன்னடைமேல்,—சொப்பனத்தே தோன்றித் துடிப்பற்றுக் கேவலமாய்,—நிற்பதுபோற் பாரா னெனின்.

(இ-ள்.) சற்குரு ஆம் மன்னு பெரும் சீயம் மதயானை தன் நடைமேல் சொப்பனத்தே தோன்றி எ-து,—ஞானசாரியனாகிய அருள் நிலைபெற்ற பெரியசிங்கம்போல் வான் சீடனாகிய மதயானையினது மேலாம் பக்குவத்தால் பிரபஞ்சமாகிய சொப்பனத்தின்கண் தோன்றி;

துடிப்பு அற்றுக் கேவலம் ஆய் நிற்பது போல் எ-து,—மதம்பொழியாநின்ற யானையினது சொப்பனத்தின்கண் சிங்கந் தோன்ற அதனது மதசெர்விதம் யாவுங்கெட்டு மருட்கேவல

ப்பட்டுநின்றாற்போலச் சீடனாகிய யானையினது உட்புறனாய்ச் சிவியாநின்ற போதப் பதைப்பெல்லாம் அற்று அருட்கேவல மாய் நிற்கும்படி;

பாரான் எனின் எ-து,—அப்போதத்திற்கும் உட்புறனாகிய கிருபாநோக்கஞ் செய்யானாயின்;

தன் இழப்பை என்ன கற்றுச் சாதிப்பான் எ-து,—ஒருவன் தற்போத ஒழிவைச் சாத்திரங்களைக் கற்று அவற்றுள் கூறிய வாறே தனது போதத்தால் நிட்டைகூடி எங்ஙனஞ் சாதித்த டைவான், எ-று.

போத ஒழிவின்கண் மெய்ப்பொருள் இருத்தலின் மெய்ப் பொருளை, "தன்னிழப்பு"என்றார். மெய்ப்போதத்தால் பொ ய்ப்போதம் அழிவதன்றி இதனை இதனாலழிக்கத் தொடங்கின் மேன்மேல்வளர்ச்சியாய் அழிவுகூடாமையின்,"தன்னிழப்பை யென்ன கற்றுச் சாதிப்பான்" என்றார். யானையைச் சிங்கம் கொல்வதுபோல ஞானத்தால் அஞ்ஞானத்தைக் கெடுத்த லின், "சற்குருவா மன்னுபெருஞ் சீயம்" என்றும், ஞாதுரு, ஞானம், ஞேயம் ஆய இவைகள் ஒன்றுந் தோன்றாது ஆன்மா அப்பார்வையால் சிவத்தில் அதீதப்படுதலின், "கேவலமாய் நிற்பதுபோற் பாராளெனின்" என்றுங் கூறினார். "குருவாஞ் சீயம்" என்றமையால் சீடனாம் யானை என்று வருவிக்கப்பட் டது. "துடிப்பற்றுக் கேவலமாய் நிற்பதுபோல்"என்று உவ மையாகக் கூறினமையால் ஈண்டும் யானையும் சிங்கமும் வரு விக்கப்பட்டன. சிங்கம் போல்வான் பாரானாயின் எங்ஙனஞ் சாதிப்பானென முடிக்க. நடை, பக்குவம், மேலாயபக்குவம் என மாறுக. சீயம் பாராளெனின் எனமுடிந்தது, இராசசிங் கம் வந்தான் என்பதுபோலக் கொள்க.

இத்திருவெண்பாவால் அதிதீவிர பக்குவர்க்காயினும் ஞானா சாரியரால் அன்றிப் போதநாசங் கூடாதென்று கூறியவாறு காண்க. (உ)

கூலித் தொழிலாளர் கொண்டுவிற்போர் போன்ற, குரு,—வேலைப் பகடிகளை மேவாதே - காலம்போல் பார்த்திருக்க வைத்த பரமகுரு வைப்பரவ,—வார்த்தையிலை தீண்டா மனம்.

(இ-ள்.) கூலித் தொழிலாளர் கொண்டுவிற்போர் போன்ற குரு வேலைப் பகடிகளை மேவாதே எ-து,—வேலைசெய்து கூலி வாங்கிக்கொள்ளுங் கூலித்தொழிலாளரையும் ஓர் பொருளைக் கொண்டு ஓர் பொருளைவிற்கும் வணிகரையும் போன்று, பிறர்க்குக் கிரியைகளைச் செய்து காட்டியும், உபதேசங்களைக் கூறியும், அவர்கையில் அருத்தம் பறிக்கும் தமக்கியையாத குருவென்னும் பெயர்கொண்ட தொழில் செய்யும் பகடிக்கூத்தாடிகளை மாணு! நீ மெய்க்குருவென்று அடையாதே;

காலம்போல் பார்த்திருக்கவைத்த பரமகுருவைப் பரவவார்த்தை இலை தீண்டா மனம் எ-து,—கதிர் வலம் வருதலால் கணம், நாழிகை, நாள், மாதம், இருது, வருடம், யுகம் முதலிய காலங்களும் அக்காலங்கள்தோறும் தோன்றும் பிரபஞ்சங்களும் அநந்தபேதமாய்த் திரியவும் தனக்கோர் திரிவின்றி அவற்றோடும் தாக்கற்றிருந்த காலதத்துவம்போல, மாயையில் தோற்றிய கருவிகளும் இக்கருவிகளால் காரியப்பட்ட பிரபஞ்சங்களும் அநந்தபேதமாய்த் திரியவும் தனக்கோர் திரிவின்றி இவற்றோடும் தாக்கற்றிருந்த அருளே வடிவாகக் கிருபாநோக்கம் வைத்து மாணுக்கனைச் சுட்டற்றிருக்கவைத்த மேலாகிய ஞானசாரியனைத் தோத்திரம் பண்ண ஓர் வசனமும் இல்லை. தியானிக்க எனின் மனமும் அவனைத் தீண்டாது, ஆகலின் அக்குருவை அடைதி, எ-று.

கதிர்வலம் வருதலால் கணமுதலிய கால பேதங்களும் பிரபஞ்ச பேதங்களும் நானுவாய்த் தோற்றினும் அவைகள் தோற்றற்கும் அது வலம் வருதற்கும் காலதத்துவம் ஏதுவானுற்

போல, மாயையில் கருவிகளும் பிரபஞ்சங்களும் நானுவாய்த் தோற்றினும் இவை தொழிற்படுதற்கும் இவை மாயையில் தோற்றுதற்கும் திருவருள் ஏதுவாயிற் றென்பதுங் காண்க. பரமகுரு சூக்குமவாக்கும் தற்போதமும் கடந்த சிவமென் றறிவிக்கவேண்டி "வார்த்தையிலே தீண்டா மனம்" என்ருர்.

இத்திருவெண்பாவால் ஆசாரியனையும் அநாசாரியனையு மாணுக்கனுக் கறிவித்தவாறு காண்க. (கூ)

குட்டித் திரட்கரடி யாறொழுகக் கோன்குதித்துக், கட்டிப் புதைந்த கதையாகும் - துட்டமலப்,—பித்தி லே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப்,— புத்திபோற் காட்டும் பொருள்.

(இ-ள்.) துட்ட மலப் பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப் புத்திபோல் காட்டும் பொருள் எ-து,— கொடிதாகிய மும்மலப் பைத்தியத்தால் முதிர்ந்த ஆசாரியர் அல்லார் ஓர்காற் கூறியது ஓர்காற் கூறுது பேய்பிடித்தாற் போலும் பிதற்றுகின்ற அபக்குவர்க்கு உபதேசம் போலுங் கூறிய அருத்தம்;

குட்டித்திரள் கரடி ஆறு ஒழுகக் கோன் குதித்துக் கட்டிப் புதைந்த கதை ஆகும் எ-து,—பலகுட்டிகளோடுங் கரடியானது நதிவெள்ளத்தோடுஞ் செல்ல அதனது கரைக்கண் நின்ற ஓரிடையன் அதனை ஆடெனக் கருதி அந்நீர்ற் குதித்து அதனைப்பற்ற அஃது இவனைப்பற்ற அஃதும் இவனும் அவ்வெள்ளத்து ஆழ்ந்தனரென்று உலகத்தார் கூறுங் கதைபோல ஆகும், எ-று.

பரஞானம் என்பது சிறிதும் இல்லாதார் அபரஞானங்களைக் கற்றுக்கொண்டு, மனைவிமுதலிய குடும்பவெள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கின்றபேர் சிலர் இடம்பநிமித்தங் கேட்க, அவர்க்கு அருத்த நிமித்தம் உபதேசிக்க, அந்த உபதேசப்பொருளால்

இருவருக்குந் தோஷமேலிட்டுப் பிறவிச்சாகரத் தாழ்வர் ஆக லின், இக்கதையை இப்பொருளுக்கு உவமையாகக் கூறினார். இடையன் காடியை ஆடென்றும் காடி இவனை நதிகடத்தும் புணையென்றும் கருதினதுபோல், அபக்குவனைப் பக்குவனெ ன்றும் அநாசாரியனை ஆசாரியனென்றும் இருவரு மாறுபா டாக்கருதினார் என்பதுமாம்.

இத்திருவெண்பாவால் அநாசாரியனுக்கும் அவனிடத்து உபதேசங்கேட்ட அபக்குவனுக்கும் குற்றம் வருமென்று அறி வித்தவாறு காண்க. (௪)

குருட்டரிப்ப னார்க்குங் குபேரனென்று பேரோ
கருப்பிரத மோத்தையோ காட்டும் - அருட்டரித்த
ஆசானைப் போல்வரோ வாறாறுக் கப்புறத்தே
பேசா திருத்தவல்லாப் பேர்.

(இ-ள்.) குருட்டு அரிப்பனார்க்கும் குபேரன் என்று பேரோ கருப்பிரதம் மோத்தையோ காட்டும் எ-து,—பிறவி அந்தகனா கிய அரிப்பாளனுக்கும் குபேரனென்று பெயருண்டுகொலோ கரும்பினது இரசத்தை மோத்தை ஆடு அறிந்து கூறுமோ அவைபோலும்;

ஆறாறுக்கு அப்புறத்தே பேசாது இருத்த அல்லாப் பேர் அருள் தரித்த ஆசானைப் போல்வரோ எ-து,—அருள் வடிவம் அல்லாத மாயாவடிவங் கொண்ட அநாசாரியரானார் முப்பத் தாறு தத்துவங்களையுங் கடந்துநின்றசிவத்தோடு மாணாக்கனை இரண்டறக் கலப்பித்து மௌனமாய் வைக்க அருளே திரு மேனியாகக்கொண் டெழுந்தருளி வந்த ஞானசாரியரைப் போலு மாவாரோ, எ-று.

குருட்டரிப்பனுக்குக் கைப்பரிசமே அன்றிக் கட்பார்வை இன்மையால் பொற்பொடியே தோன்றாது, அங்ஙனம் இரு ப்ப அவனையும் செல்வத்தால் அளகேசன் என்று கூறக்கூடு

மோ, அதுபோல அநாசாரியருக்குக் கிரியைத் தொழிலன்றி ஞானமே யில்லை. அங்ஙனம் இருப்ப அவரையுங் குரு என்று கூறப்படுமோ என்றும், மோத்தையாடு கொழுந்தாடை தின்ப தே அன்றிக் கரும்புதின்ன அறியாதாதலின் அதனது இரசத்தை அறிந்து இங்ஙனமென்று தனது குட்டிக்குக் காட்ட அறியுமோ, அதுபோல, அநாசாரியர் ஆகமங்கள் கூறும் மந்திரகலை, தந்திரகலை, உபதேசகலைகளுள் உபதேசகலையைவிட்டு இருவகைக்கலைகளை ஆராய்ந்து அவற்றுள் கூறிய சரியையாதிகளைச்செய்து அவற்றான் வரும் விடயாநந்தானுபவம் பெறுவதே அன்றிச் சிவாநந்தானுபவம் அணுவளவேனும் அறியார், அங்ஙனம் இருப்பப் பிறர்க்கு அச்சிவாநந்தானுபவம் எங்ஙனங் கூறுவார் என்றும் இந்த உவமைகளால் அறிவித்தவாறுகாண்க.

அஃதன்றியும் ஆடோகாட்டும் என்னும் எதிர்மறை ஓகாரம் அவ்வாட்டை மறுத்து யானையைக் காட்டிநின்றதாகலின் கருப்பந்தோட்டத்தைப்போல் சிவாகமம், அதனுட் புகுதும் ஆடு யானைபோல் இதனுட் புகுதும் கிரியாகுரு, ஞானகுரு. ஆடு கரும்பைவிட்டு இலையைத்தின்று அதனது சுவையைத் தானும் அறிந்து தனது குட்டிக்குங் காட்டுதல்போலவும், யானை இலையைவிட்டுக் கரும்பைத் தின்று அதனது சுவையைத் தானும் அறிந்து தனது கன்றுக்குங் காட்டுதல்போலவும், கிரியாகுரு, மந்திர தந்திரகலைகளை ஆராய்ந்து அவற்றுள் கூறிய சரியாதிகளை அநுட்டித்து அவற்றான் வரும் விடயாநந்தத்தைத் தானு மனுபவித்துத் தன்னை அடைந்த சீடனுக்கும் அவ்வுபதேசங்களால் அவ்வாநந்தத்தை வருவிப்பனென்பதும், ஞானகுரு மந்திர தந்திர கலைகளைவிட்டு உபதேசகலையை ஆராய்ந்து அதனுள்கூறிய ஞானாநந்தத்தைத் தானும்பெற்றுத் தன்னை அடைந்த பக்குவனுக்கும் அந்த ஞானாநந்தத்தை வருவிப்பனென்பதுங் காண்க.

(உ-ம்.) பிரபுலிங்கலீலை "புறம்புகாண்குவன் புல்லியனீசனை, அறிந்தஞானி யகமுறக்காண்பனால், எறும்பி காண்குறி

லின்கரும் பேசொளும், செறிந்தவாடிலை தின்பன வென்பவே" அஜகஜாந்தரம் என்னுங் கிரந்தசமாதியும், அது. குருட்டறிப்பதென்பதை "குருட்டறிப்பனர்" என்று இழிபின்கண் பன்மையாகக் கூறினர். கட்பார்வை இன்மைபோல் ஞானமின்மை, கைப்பரிசம் அறிதல் போல் கிரியைகளைச்செய்தல், என்பதுங் காண்க.

இத்திருவெண்பாவால் அநாசாரியர் இலக்கணமும் ஆசாரியர் இலக்கணமுங் கூறியவாறு காண்க. (௫)

தன்னறிவு சாட்சியல்லாற் சாயுச்சி யப்பயனைச்
சொன்னபிழை கெட்டேன் றொலைப்பரோ-முன்னே
நடவா வழியொருவன் சொல்ல நடந்து
தடுமாறி நொந்தறியா தார்.

(இ-ள்.) தன் அறிவு சாட்சி அல்லால் சாயுச்சியப் பயனைச் சொன்ன பிழை கெட்டேன் தொலைப்பரோ எ-து,—சிவானுபவம் நன்றாய் விளங்கிற்று என்பதற்கும் அஃது இன்றென்பதற்கும் தனக்குத் தன்னறிவுதானே சாட்சியாயிருக்கவும் பயனைக்குறித்து மயக்கத்தால் அந்தஅநுபவந் தனக்குண்டுபோற் காட்டிப் பிறருக்கு வீடடையும் நெறியான உபதேசப்பொருளைக் கூறிய பாவங்களைக் கெட்டேன்! எந்தக்காலம் நீக்கிக் கொள்வரோ;

முன்னே நடவாவழி ஒருவன் சொல்ல நடந்து தடுமாறி நொந்து அறியாதார் எ-து,—அஃதன்றியும் தாம் முன்சொல்லாத ஓரூர்க்குப் பின்செல்லுங்கால் அவ்வூரடையும் நெறியாதென்று அந் நெறிக்கண் தான் முன்நடவா வொருவனைக் கேட்ப, அவன் அதன்கட் சென்றான்போன்று நெறி அல்லா நெறிகூற, ஈது உண்மையெனக் கருதி அந்நெறிக்கட் சென்று முன்னிருந்த வூரும் பின்னடையும் ஊரும் அன்றி நடுவிடைத் தடுமாறி மனம் உடல் வருந்தி அறிந்தவரலர், எ-று.

ஐயன், காளி, சந்நிதிகளில் அசத்தியங் கூறினார்க்கும் இம்மைக்கண்ணே துன்பம் வருதலின் பூரணசிவத்தின் சந்நிதியில் அசத்தியங் கூறிய பாவந் தொலையாது ஆகலின், "கெட்டேன் றொலைப்பரோ" என்றும், வாக்கால் கேட்டறிந்து காயத்தால் சென்றடையும் ஊர்க்கு நெறி அறியா ஒருவன் நெறி கூறக்கேட்டு அதன்கட் சென்றதனுன் வரும் இடர் அநுபவித்தறிந்தவர் மனத்தானுஞ் சென்று கூடுதற்கரிய வீடடையுநெறியைத் தாம் அறியாதிருந்தும் அறிந்தார்போன்று பிறருக்குக் கூறுர் ஆகலின், இங்ஙனம் உவமை கூறினுர். செறலின்கண் 'தம்' என்னும் பன்மை 'தன்' என்னும் ஒருமையாய் வந்தது. "அல்லால்" என்பதை மயக்கத்தாலெனக் கொள்க. "முன்னே" என்பதை இரண்டிடத்துங் கூட்டுக. "கெட்டேன்" என்பது இரக்கக் குறிப்பின்கண் வந்த வழக்கச்சொல்.

இத்திருவெண்பாவால் சாத்தியனே அன்றி சாதகன் ஞானேபதேசம் பண்ணுதல் குற்றமென்று அறிவித்தவாறு காண்க. (௬)

பொய்போகப் போகப் பொருந்திப் பொருடானும்
சையோக போக தரங்கத்தில் - நையும்
பரிபாகங்கண்டு பதையாமற் பார்க்கும்
குருவேகாண் ஞானக் குரு.

(இ-ள்.) பொய் போகப் போகப் பொருந்தி எ-து,—பொய்யாகிய கருவிகள் முப்பத்தாறும் நீங்க நீங்கவே அவைகளைப் பகுத்தறிந்து நீங்கின்ற அறிவு தானென்றுதன்னை அருளால் உள்ளபடி கண்டு பின்பு அருள்தரிசனம், பராதரிசனம், பராயோகம், என்னும் இவற்றை அடைந்து;

பொருள் தான் ஆம் சையோக போக தரங்கத்தில் நையும் பரிபாகம் கண்டு பதையாமல் பார்க்கும் குருவே ஞானக் குரு எ-து,—மெய்ப்பொருள் தானாகிய அநுபவசத்தியில் தோன்

றும் ஆநந்தபோக சமுத்திரத்து அலையில் அவன் கரைந்து போகுந் தீவிரதர பக்குவம் ஈதென்று கண்டு மாணுக்கனது போதம் அனுவளவேனும் பதையாது அடங்கக் கிருபாநோக்கம் வைக்கும் ஆசாரியனே ஞானசாரியனாவான், எ-று.

சிவகரணம் பரையோகமெனவுந் தொடர்தலின், "பொய்போகப்போக" என்றார். "சையோகம்" என்றது அனுபவசத்தி. அது பரையோகத்திற்கும் சுகாதீதத்திற்கும் இடையே தோன்றும் ஆநந்தப்பேற்றிற் கிடம். "போகதரங்கத்து" என்றமையால் சமுத்திரம் வருவிக்கப்பட்டது. "தரங்கம்" ஆனந்தமேலிடல்.

அவ்விடத்து ஆன்மபோதங் கெடும் ஆகலின், "கையும்" என்றார். அடிதொடங்கி அநுபவமுற்றுங் கூறினமையால் இவ்வநுபவமுற்றும் பெறுமவன் அதிதீவிரபக்குவன் என்பதுங் காண்க. காண் — அசை.

இத்திருவெண்பாவால் ஞானசாரியர் ஆயினும் பக்குவனை அறிந்து போதியார் ஆயின் அவரையும் ஆசாரியர் அல்லர் என்றுங் கூறியவாறு காண்க. (எ)

தேனுண் டுமிழுந் திறம்போற் சிவாநந்த
மோனந் துளும்பி மொழிகாலத் - தேநின்று
தோன்றிருது போலுமொன்றைச் சுட்டாது கேட்ப
கான்றதவம் வேத மது. [வர்கட்

(இ-ள்.) தேன் உண்டு உமிழும் திறம்போல் சிவாநந்தமோனம் துளும்பி மொழி காலத்தே எ-து,—தேனைநிறைய உண்டு அதனை மீட்டும் கக்குந்தன்மைபோல் உட்புறனும் எங்கும் நிறைந்து மௌனமாயிருந்த சிவாநந்த வெள்ளம் காருணியத்தால் ததும்பி ஞாநாசாரியர் உபதேசமொழிகளைக் கூறுங்காலத்தளவும்,

னின்று தோன்று இருதுபோலும் ஒன்றைச் சுட்டாதுகேட் பவர்கட்கு ஆன்ற தவம் வேதம் அது எ-து,—பணிவிடைசெ ய்துநின்று தோன்றப்பட்ட இருதுகாலம்போலும் அது இது என்று ஒன்றையுஞ் சுட்டாது பதைப்பற இருந்து அதனைக் கேட்பவர்களுக்கு மாட்சிமைப்பட்ட தவமுடிவும் வேதமுடி வும் அங்ஙனம் நின்று கேட்குங் கேள்வியாம், எ-று.

ஆசாரியர் மாணாக்கனது பக்குவம் அறிந்து வலியக்கூறு தலே அன்றி அவனையும் இவன் வலியக் கேட்கலாகாது ஆக லின், "மோனந்தழும்பி மொழிகாலத்தே" என்றும், இருது வில் பத்திரபுட்ப பலாதிகள் தோற்றினும் அவ்விருது விகா ரம் இன்றி இருந்தாற்போலக் கருவிகளோடுங் கூடியிருந்தும் அவற்றுள் தாக்கற்றுநின்று கேட்கவேண்டும் ஆகலின், "இரு துபோலுஞ் சுட்டாதுகேட்பவர்கள்" என்றுங் கூறினார்.

மோனந்தழும்பி மொழிகாலத் தென்றமையானும், ஒன் றைச் சுட்டாது கேட்பவர்க ளென்றமையானும், சொல்லாமற் சொன்னதென்றும் கேளாமற் கேட்டதென்றும் ஆயிற்று. சுட் டறநிற்க வந்தது தவப்பயன் ஆகலின் அதனைத் தவம் என் றும், அங்ஙனம் நின்று கேட்கும் மொழி ஆகலின் அதனை வேதம் என்றும், கூறினார். அங்ஙனஞ் சொல்லுவதும் இங் ஙனம் கேட்பதும் சாம்பிரதாயம்.

இத்திருவெண்பாவால் ஆசாரியன் உபதேசங் கூறுமாறும் மாணாக்கன் ஏற்றுக்கொள்ளுமாறும் அறிவித்தவாறு காண்க.

இருளிற் சுடரென்ன விந்திரவி யென்ன
அருளைக் கடந்தபரா னந்தர் - திருவாக்
கமுதமழை யம்பரச்சொ னன்னிமித்த மாங்கே
மமதையிரா தென்றே மதி.

(இ-ள்.) இருளில் சுடர் என்ன இந்து இரவி என்ன அருளை க்கடந்த பரானந்தர் திருவாக்கு எ-து,—பூத இருளின்கண்

தோற்றம் விளக்குப்போலும் சந்திரன்போலும் சூரியன்போலும் பிரகாசித்து ஆணவ இருளைநீக்கும் திருவருளையுங்கடந்து சிவாநந்தமயமாய் எங்கும் நிறைந்துள்ள ஞானசாரியாது அழகிய வசனம்,

அமுத மழை அம்பரச்சொல் நல் நிமித்தம் ஆங்கே மமதை இராது என்றே மதி எ-து, — அமுதமழைபோலும் ஆகாச வாக்குப்போலும் நல்ல நிமித்தம்போலும் ஆம் அன்றி அதன்கண் சிறிதேனும் அகங்காரம் உண்டாகாதென்று அறிதி, எ-று.

அருள் தோற்றுங்கால் மூவிதமாய்த் தோற்றலானும் ஒன்றற்கொன்று அதிகமாய்ப் பிரகாசிக்கையானும் விளக்காதி முச்சுடரையும் உவமையாகக் கூறினார்.

(உ-ம்.) தத்துவப்பிரகாசம் 'பொறிகரணங் களையுயிர்ப் போற் போதம்போ தத்தைப், பொருந்திநடத் திடுஞ்செயலாற் போதவுணர் வுணர்ந்தே, அறிவினது செயலோநா மெனவுணர்வுற் றிருப்ப வப்போது விளக்கெனவு மருணன்மதியெனவும், கறைவிடியுங் காலமென வொளிவந்துற் பவிக்கும்' என்பதனுற் காண்க.

நீர்மழை கைம்மாறின்றிப் பொழியினும் உற்பத்தி நாசம் உளவாகலின் அம்மழையை உவமை கூறாமல் 'அமுதமழை' என்றும், ஆகாசவாக்கு உண்மை அறிவித்தல்போல் உண்மையாகிய சிவத்தை அறிவித்தலின் 'அம்பரச்சொல்' என்றும், நல்ல நிமித்தங் கேட்டோர்க்குத் தாங் கருதிய பொருள் கைகூடல்போல் இதனைக் கேட்டோர்க்குத் தாம் கருதிய வீடு கைகூடுதலின் 'நன்னிமித்தம்' என்றுங், கூறினார்.

தற்போதத்தால் கூறும் சொற்கட்கெல்லாம் மமதை இருத்தலின் 'ஆங்கே மமதையிராது' என்றார். (கூ)

சரியா புருடனைப்போ லாநந்த மேதடித்த
மாயா வயிரி மனமாண்ட - நேயவுரை

ஆவேசர் வீர ராசர் மடலாளர்
சாவாநந் தர்க்குச் சரி.

(இ-ள்.) சாயா புருடனைப்போல் ஆநந்தமே தடித்த மாயா வயிரி மனமாண்ட நேய உரை எ-து,—வடிவம் இன்றிய ஆகாயத்தில் வடிவம்போல் தடித்த சாயாபுருடனைப்போல் வடிவம் இன்றிய பேராநந்தந் தானே காருணியத்தால் வடிவம்போற் காட்டி எழுந்தருளிவந்த மாயைக்கு ஓர் வயிரியான ஞாநாசாரியரது மனாதீதமான கிருபாவசனம்;

ஆவேசர் வீரர் அரசர் மடலாளர் சாவு ஆநந்தர்க்குச் சரி எ-து,—ஆவேசம் ஏறினோர் மாவீர ராயினோர் ஒரு குடைக்கீழ் ஆளும் அரசர் மடல் எடுத்தவர் தாம் சாவது இன்பமாய்க் கருதினோர் ஆகிய இவர்களது மொழிகட்குச் சரியாம், எ-று.

ஆவேசமேறினோர் தற்செயல் இன்றிக் கூறுதல்போல முக்கரணங்களையும் தமதிடத் தடக்கிக்கொண்டு அருளாய் நின்று கூறினமையானும், மாவீரராயினோர் எதிர்த்தாரைக் கொல்வதே கருத்தாகக் கூறுதல்போல் அறிவுக்கெதிரீடாய்த் தோற்றுவன எல்லாம் அதனாற் கொல்வதே கருத்தாகக் கூறுதலானும், ஓர்குடைக்கீழ் ஆளும் அரசர் கூறியமொழிப்படி இம்மைப்பயனருதல்போல் இவர் கூறியமொழிப்படி மறுமைப்பயனருதலானும், மடலாளர் மற்றொன்றையுங் கூறாது தாம் நச்சிய மாதினையே புகழ்ந்து கூறுதல்போலச் சரியாதிகளைக் கூறாது தமது ஞாநாநந்தத்தையே புகழ்ந்து கூறுதலானும் சாவாநந்தர் தாம் சாவதே இன்பமாகக் கூறுதல்போலத் தற்போத வொழிவையே இன்பமாகக் கூறுதலானும், ஆவேசமேறினோர் முதலிய ஐவர் மொழியையும் உவமையாகக் கூறினார். அவரது மொழிக்கு உவமை கூறினமையால் இவரது மொழி வருவிக்கப்பட்டது.

இவ்விரண்டு திருவெண்பாவானும் ஞாநாசாரியரது திருவாக்குச் சிறப்புக் கூறியவாறு காண்க. (௧0)

சத்தியநிர் வாணத்தாற் றற்போதத் தாக்கறுத்து
வைத்துவழி காட்டு மறைப்புலவன் - சுத்தன்
தமிழ்க்குரிசிற் சீகாழிச் சம்பந்த னென்பான்
எமக்கருளிச் செய்த திது.

(இ-ள்.) சத்தியநிர்வாணத்தால் தற்போதத்தாக்கு அறுத்து வைத்து வழிகாட்டும் எ-து,—சத்திய நிர்வாணத் தீக்ஷையால் எனது போதத்தை ஒன்றேடும் பற்ருது ஒழித்துச் சிவத்தோடு இரண்டறக் கலக்கவைத்து என்பால் வந்தடைந்தோர்க்கும் எனதுள்ளே தாமே நிறைந்திருந்து முத்திநெறியை அறிவிக்கும்;

மறைப்புலவன் சுத்தன் தமிழ்க்குரிசில் சீகாழிச் சம்பந்தன் என்பான் எமக்கு அருளிச்செய்தது இது எ-து.—வேதங்களையெல்லாம் ஓதாமல் உணர்ந்த ஞானப்புலவர், மும்மலங்களையுங் கடந்து நின்ற நின்மலர், தமிழினது இலக்கணமெல்லாம் அளவிட்டறிந்த தமிழ் வேந்தர், சீகாழி யென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருந்த திருஞான சம்பந்தப் பிள்ளையாரென்று யாவரும் புகழாநின்ற சுவாமிகள், எம்போல்வார் வீடடைந்து உய்யும் நிமித்தம் அருளிச்செய்தது இந்நூலின் அருத்தம், எ-று.

இந்நூல் பிறர்க்கு உபகாரமாகக் கூறினமையால் 'வழிகாட்டும்' என்பது பிறர்க்கெனக்கொள்க 'மறைப்புலவன்.' 'தமிழ்க் குரிசில்' என்றமையால் உபய கலைகளையும் உடையானென்றறிக.

இத்திருவெண்பாவால் நூன்மரபு கூறியவாறு காண்க. ()

தாக்கற்ற பூரணத்தே சந்தற்ற தம்மைமலம்
நீக்குந் துயரகல நேசித்தோர் - பார்க்கும்
வழிபலநாம் பைமறித்த வாறுநீ மாளா
ஒழிவி லொடுக்கமுறைப் போம்.

(இ-ள்.) தாக்கு அற்ற பூரணத்தே சந்து அற்ற தம்மை மலம் நீக்கும் துயர் அகல நேசித்தோர் எ-து,—எல்லாவற் றோடும் கூடிநின்றும் அவைகள் ஒன்றோடும் தாக்கற் றிருந்த பரிபூரண சிவத்தோடு ஆணவம் நீங்கியவிடத்து இரண்டறக் கலந்து விளங்காநின்ற தம்மை அந்த ஐக்கியத்தைத் தெரிய வொட்டாது மறைத்து இரண்டு படுக்கும் அவ்வாணவமலத் துன்பம் அகன்று ஏக அன்புகொண்டோர்;

பார்க்கும் வழிபல நாம் பை மறித்த ஆறு நீமாளா ஒழிவில் ஒடுக்கம் உரைப்போம் எ-து,—ஆராய்ந்தறியும் சாத்திரநெறி கள் பற்பல உளவாம் அவைபோலும் மறைத்துக் கூறாது நாம் பையைவிரித்து அதனுள் இருந்த பொருள் ஈதென்று காட்டு மாறு மாணுக்கனே ! நீ ஒழியாமல் ஒழியுமிடத்து ஒடுங்கும் நெறியைக் கூறுவாம், எ-று.

ஆன்மாவிற்குச் சிவத்தோடு ஐக்கியம் மலமறைப்பால் தெரி யாதிருத்தலின், 'நீக்குந்துயரகல நேசித்தோர்' என்றார். 'பார்க்கும் வழிபல' என்றது பேதம் அபேதம் பேதாபேதங்களா ய்க் கூறுநெறிகள். அநுபவரகசியமெல்லா மறையாமல் கூறி னமையால் 'பைமறித்தவாறு' என்றார். ஆன்மா கெடாது அத னதுபோதங் கெடுதலின் 'மாளாவொழிவில்' என்றார். அவ்வி டஞ் சுகாதீதம்; அதனுள் ஒடுங்கும் நெறி இதனுள் கூறினமை யால் 'ஒழிவிலொடுக்க முரைப்போம்' என்றார்.

இத்திருவெண்பாவால் நூற்பயன் கூறியவாறு காண்க. ()

சுருதி குருவாக்குச் சுவாநுபவ மூன்றும்
சரியொத்த போதமுனை சார்வைத் - தெரிய
உரைத்தநூற் பேர்கே ளொழிவி லொடுக்கம்
விரித்தநூற் கெல்லாம் விதை.

(இ-ள்.) குருவாக்கு சுருதி சுவாநுபவம் மூன்றும் சரிஒத்த போதமுனைச் சார்வை எ-து,—ஞாநாசாரியர் அருளிச்செய்த

